[25th March 1961

SRI V. K. KOTHANDARAMAN: சிலைகள் மாத்திரம் அல்ல, படங்களும் கூட வைக்கவேண்டுமென்றால் முதலில் ஐ.எல்.பி.-க்கு எழுதி, லா டிபார்ட்டுமெண்டுக்குப் போய், பிறகு மந்திரிகளும் பார்த்து உத்தரவு கொடுத்தால்தான் வைக்கலாம், இல்லாவிட்டால் முடியாது என்ற அளவுக்கு ஏதாவது தனி உத்தரவு இருக்கிறதா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் விருப்பப்படி சிலைகளையோ, படங்களையோ வைக்கக்கூடாது என்பதுதான் நோக்கம்.

SRI S. M. ANNAMALAI: சிலைகளை வைக்கவேண்டுமென்றால் சர்க்கார பணம் கொடுக்க வேண்டிய நிலைமை இருக்கிறது. அதனால் இப்படிப் பரிசிலிப்பதாகச் சொன்னார்கள். அந்த அந்த முனிசிபாலிடிகளே, நகரசபைகளே பணச்செலவை ஏற்றுக்கொள்ளும் போது சர்க்கார் எவ்விதத் தடங்கலுமின்றி அனுமதி வழங்குவார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : சிலைகளை வைத்த பிறகு அரசாங்க உதவி கேட்டு எழுதியிருக்கிறார்கள். பொதுவாக அவரவர்களுடைய விருப்பத்திற்கு சிலைகளை வைப்பது, படங்களை வைப்பது கூடாது என்பதற்குத்தான் இவ்வாறு செய்யப்பட்டிருக்கிறது.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : தகுதியற்றவர்கள் சிலைகளையோ, படங்களையோ வைப்பதற்கு முயற்சிக்கிறார்கள் என்ற புகார்கள் இப்போது இல்லை.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அவ்விதமான புகார்கள் இப்போது இல்லை.

*Fish Farm (Otteri Lake)*

*931 *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI): கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேலூர் நகரசபை பாராமரிப்பில் உள்ள ஓட்டேரியில் மீன் வளர்க்கப்படுகிறதா ?

(இ) அந்த ஏரியின் அருகில், மீன் வளர்ப்புப் பண்ணை அமைத்து அபிவிருத்தி செய்ய உத்தேசம் உண்டா ?

THI HON. SRIMATHI LOURDAMMAL SIMON : (அ) & (இ) No, Sir.

SRI S. M. ANNAMALAI: ஓட்டேரியில் எப்போதும் தண்ணீர் இருப்பது வழக்கம். அப்படித் தண்ணீர் இருக்கிற ஏரியில் மீன் வளர்க்க ஏன் பண்ணை ஆரம்பிக்கக் கூடாது ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஓட்டேரியில் உள்ள தண்ணீரில் ஐந்து நாட்களுக்குத்தான் மீன் பிடிக்க வசதி யுள்ளது. அதுவும் அந்த ஏரி மீன் பிடிக்கும் ஏரியாக இருக்கத் தகுதி இல்லாதது என்ற காரணத்தால் அங்கே மீன் பண்ணை ஆரம்பிக்கவில்லை.

25th March 1961]

**Sri A. VEDARATHNAM** : நம் மாநிலத்தில் மீன் பண்ணை எங்கெங்கே இருக்கின்றன ? அவற்றுள் சிறந்த பண்ணை எது ? இதில் மீன் வளர்ப்பதற்கு மீன் குஞ்சுகள் எங்கே இருந்து சேகரிக்கப்படுகின்றன ?

DEPUTY SPEAKER : Let the hon. Member put a separate question.

*Fishermen Co-operative Societies*

* 933 *Q*.—Sri K. VINAYAKAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) how many Fishermen Co-operative Societies are functioning in the Ramanathapuram district;

(*b*) if so, whether all the Fishermen Co-operative Societies have joined the Fishermen Co-operative Federation in the district; and

(*c*) whether the Fishermen Co-operative Federations are represented in the State Fishermen's Advisory Board?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : (*a*) 34.

(*b*) Only 31 Fishermen Co-operative Societies are members of the Federations.

(*c*) Yes. Among others the following Presidents of the District Fisherman Co-operative Federations are represented as non-official members of the State Fisheries Advisory Board :—

1. Madras Fishermen Co-operative Federation.

2. Chingleput and North Arcot District Inland Fishermen Co-operative Federation.

3. South Arcot District Fishermen Co-operative Federation.

4. Thanjavur District Fishermen Co-operative Federation.

5. Tirunelveli District Fishermen Co-operative Federation.

6. Kanyakumari District Fishermen Co-operative Federation.

Sri K. VINAYAKAM : May I know why the Fishermen Co-operative Federation of Ramanathapuram district has not been represented in the State Fishermen's Advisory Board? What are their disqualifications?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : It is not considered a disqualification. The President of Ramanathapuram Federation is a chunk merchant. Already representation is given to the chunk merchants and there is a member from the same class represented in the Advisory Board. As such it was found not necessary to give two places for them.